Post without pre-payment Licence No. G. 6. TN. MS. C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the people

Regd No. TN - MS [C] 244 Phone: 420212 பக்கம் 4 விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 11 சென்னை 7 12 86 ஞாயிறு வெளியூர் 8 12 86 திங்கள் இதழ் 51

# பிரதமருக்கு புரட்சித்தலைவர் கடிதம்

## "மின் நிலையத்திற்கு நிலக்கரி, உலைஎண்ணெய் வழங்க ஏற்பாடு செய்க"

மதுரை, டிச. 7- மேட்டூர் அனல் மின் நிலையத்துக்கு தேவையான நிலக்கரியையும், பேசின்பிரிட்ஜ் அனல் மின் நிலையத்திற்கு தேவையான உலை எண்ணெயையும் வழங்க கோரி பிரதமர் ராஜீவுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் கடிதம் எழுதிஇருப்பதாக அமைச்சர் வி வி சுவாமி நாதன் கூறினார்.

அமைச்சர் வி.வி.சுவாமி நாதன் மதுரையில் நடைபெற்ற மின்வாரிய ஆலோசனைக் கூட்டத்தில் பங்கேற்றார், பின்னர் நிருபாகளிடம் பேசுகையில் அவர் கூறியதாவது:

மேட்டூர் புதிய அனல் மின் நிலையம் ஜனவரி மாதம் முதல் செயல்படத் துவங்கும் இதன் உறபத்தித்திறன் 210 மெகாவாட் திறன் கொண்டதாகும்.

சென்னை பேசின் பிரிட்ஜ் அனல்மின் நிலையத்தில நிறுவப்பட இருக்கும் புதிய யூனிட்டுகள் பிப்ரவரியில் செயல்படத் துவங்கும்.





### தடையின்றி மின் சப்ளை

மேட்டூர் அனல் மின் நிலையத்துக்கு தேவையான நிலக்கரியையும். பேசின்பிரிட்ஜ் மின் நிலையத்திற்கு தேவையான உலை எண்ணெயையும் வழங்கக் கோரி பிரதமர் ராஜீவுக்கும். சுரங்கத் துறை அமைச்சருக்கும் முதல்வர்புரட்சித்தலைவர் கடிதம் எழுதி உள்ளார்.

தமிழகத்தில் 24மணி நேரமும் தடையின்றி மின் சாரம் சப்ளை செய்ய தினமும் 2200 மெகாவாட் மின் சாரம் தேவை ஆனால், தற்போது 700 மெகாவாட் மின்சாரம் தான் கிடைக்கிறது இன்னும் 1500 மெகாவாட் மின்சாரம் தேவை. மின் உற்பத்திதிறனை அதிகரிப்பது குறித்து ஆலோசனை செய்து வருகிறோம்.

### திருமலை நாயக்கர் விழா

மன்னர் திருமலைநாயக்கர் விழா பிப்ரவரி மாதம் இரண்டு நாள் மதுரையில் நடைபெறுகிறது. இரண்டாம் நாள் நிகழ்ச்சியில் முதல்வர்புரட்சித்தலைவர் பங்கேற்கிறார்.

வனத்துறையை மேம்படுத்த அனைத்துமாவட்ட வனத்துறை அதிகாரிகளையும் முதல்வர் புரட்சித் தலைவர் அழைத்துப் பேச இருக்கிறார்.

கோவில்களில் தற்போது இருக்கும் தக்கார்பதவியை ஒழித்து விட்டு அறங்காவலர் குழுவை அமைப்பது குறித்து அரசுநடவடிக்கை எடுத்து வருகிறது.

மதுரை மாநகராட்சி மின் வாரியத்துக்கு 3 கோடியே 50 லட்ச ரூபாய் செலுத்த வேண்டி உள்ளது இதை மாதம் 50 ஆயிரம் ரூபாய் வீதம்கட்ட மாநகராட்சி ஒப்புக் கொண்டுள்ளது எனவே மதுரை மாநகராட்சி பகுதிகளில் மின் வெட்டு இருக்காது.

இவ்வாறு அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் கூறினார்.

## பஸ் விபத்து: 11 உடல்கள் உறவினரிடம் ஒப்படைப்பு

சென்னை, டிச 7-
நேற்று பிற்பகல்செங்கற்பட்டு மாவட்டம் சிங்கப்பெருமாள்கோவில் அருகே பயங்கர பஸ் விபத்து ஏற்பட்டு 16 பேர் அதே இடத்தில் பலியானார்கள்.

இவர்களில் 11 பேரின் உடல்கள் அடையாளம் கண்டுபிடிக்கப்பட்டுள்ள அவர்களுடைய உடல்கள் அவர்களது உறவினர்களிடம் ஒப்படைக்கப்பட்டது.

விபத்து நடந்தஇடத்தை நேற்றிரவு 11 மணியளவில் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஸ்ரீபால் பார்வையிட்டார்.

விபத்தால் பாதிக்கப்பட்டு செங்கற்பட்டு மருத்துவமனையில் சிகிச்சைபெற்று வரும் பஸ்பயணிகளையும் அவர் சென்று பார்த்தார். அவர்களது உடல்நலம் பற்றி டாக்டர்களிடம் விசாரித்தார். பயணிகளுக்கு ஸ்ரீபால் ஆறுதல் கூறினார்.

## தீவிபத்து: தாய் -மகன் சாவு

சென்னை, டிச 7-
சென்னை கொருக்குப்பேட்டை ராதாகிருஷ்ணன் நகரில் ஏற்பட்ட தீவிபத்தில் தாயும், மகனும் பலியானார்கள.

இதுபற்றிய விவரம் வருமாறு:

ராதாகிருஷ்ணன் நகர் 2-வது தெருவில் ஒரே குடிசையில் சௌபாக்கியத்தம்மாள (வயது60)அவரது மகன்கள் பச்சந்தின் (வயது38) நாகராஜன் (வயது35) குமரேசன் (வயது30)எத்திராஜ் (வயது28) ஆகியோர் வசித்து வந்தனர் இன்று காலை திடீரென குடிசைதீப்பற்றி எரிந்தது. இதில் சௌபாக்கியத்தம்மாளும். எத்திராஜும் கருகினர்.





# நகராட்சி பள்ளிகள் அரசே ஏற்றுநடத்தும்

மதுரை. டிச. 7- மாநகராட்சி, நகராட்சி பள்ளிகளை அரசேஏற்று நடத்துமென்று கல்வி அமைச்சர் பொன்னையன் கூறினார்.

மதுரையில் மதுரை மாவட்ட கல்வி சீரமைப்பு மாநாடு நடைபெற்றது. இந்த மாநாட்டில் கல்வி அமைச்சர் பொன்னையன் பங்கேற்று பேசினார்

கல்வித்துறை செயலர் சுந்தர்ராசன் தலைமையில் நடைபெற்ற இந்த விழாவில் அமைச்சர் பொன்னையன் பற்கேற்று பேசினார். அவர் பேசுகையில் ஊராட்சி ஒன்றிய பள்ளிகளை அரசு ஏற்று நடத்துவது போலமாநகராட்சி நகராட்சி பள்ளிகளையும் அரசே ஏற்று நடத்த இருப்பதாக கூறினார். மாநகராட்சி நகராட்சி ஆசிரியர்களும் விரைவில் அரசு ஊழியர்கள் ஆவாாகள் என்றும் அமைச்சர் பொன்னையன் கூறினார்.

கல்விக்காக 480 கோடி ரூபாயை புரட்சித்தலைவர் அரசு செலவழித்து வருவதாகவும் அமைச்சர் பொன்னையன் குறிப்பிட்டார்.

## கானுவுக்குஆட்டுக் குட்டி பரிசு

மதுரை, டிச. 7- மதுரை வந்த ஜப்பான் டாக்டர் கானுவுக்கு ஆட்டு குட்டி ஒன்றினை கழகத்தோழர்கள் பரிசாக அளித்தனர்.

சிவகாசியைச் சேர்ந்த கழகத்தோழர்கள்கோபால் கோபால்சாமி, சுந்தரராஜன் ஆகியோர் இநதப் பரிசினை அளித்தனர்,

அப்போது சட்டமன்ற உறுப்பினர் பாலகிருஷ்ணனும் உடனிருந்தார்.

## ஜே.சி.டி. பிரபாகரன் வேண்டுகோள்

சென்னை, டிச. 7-
இதய தெய்வம் டாக்டர் புரட்சித்தலைவர் அவர்களின் இன்னுயிரை காப்பாற்ற துணை நின்ற டாக்டர் கானு அவர்களுக்கு 11-12-86 அன்று மாலை கலைவாணர் அரங்கில் நடைபெறும் பாராட்டு விழாவில் எம். ஜி, ஆர். இளைஞர் அணியினர் சீருடையில் பெருமளவில் கலந்து கொள்ள வேண்டுகிறேன், சென்னை மாநகர இளைஞர்பட்டாளமே எழுச்சியுடன் திரண்டு வந்தது காண்'' என்று காண்போர் வியக்கும் வண்ணம் நம் வரவேற்பு அமைந்திட வேண்டும் என்று எம். ஜி. ஆர். இளைஞர் அணிசெயலாளர் ஜே. சி. டி. பிரபாகரன் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

## ரூ. $1\frac{3}{4}$ கோடி ஆஸ்பத்திரி கட்டிடம் புரட்சித்தலைவர் துவக்குகிறார்

சென்னை,டிச 7-
சென்னை எழும்பூரில் ரூபாய் 175 லட்சம் செலவில் கட்டப்பட்ட புதிய மருத்துவமனை திறப்பு விழா 8-ம் தேதி மாலை நடைபெறுகிறது.

இந்த புதியகட்டிடத்தை முதல்வர்புரட்சித் தலைவர் திறந்து வைக்கிறார்.

அமைச்சர்கள் ப. உ.ச. கே. கே எஸ். எஸ். ஆர். ராமச்சந்திரன் ஆகியோர் இந்த விழாவில் கலந்து கொள்கிறார்கள்,

இந்த புதிய கட்டிடத்தில் மேலும் 250 படுக்கை வசதிகள் செய்யப்படுகிறது

குழந்தைகளுக்கான நரம்பியல் சகிச்சைப் பிரிவு - இருதயம் மற்றும் சிறுநீரக சிகிச்சை பிரிவு நவீன எக்ஸ்ரே வசதி, புற்றுநோய் சிகிச்சைப்பிரிவு ஆகியவை இங்கு விரிவு படுத்தப்படுவதாக மருத்துவமனையின் கண்காணிப்பாளர் மற்றும் இயக்குநருமான டாக்டர் டி. துரைராசன் தெரிவித்தார்.

## சிங்கப்பூருக்கு மர்ம பயணமா? டி.ஜி.பி. மோகன்தாஸ் மறுப்பு

சென்னை, டிச. 7-
சிங்கப்பூருக்கு தாம் 'மர்ம'' பயணம் சென்றுள்ளதாக 'இந்தியன் எக்ஸ்பிரஸ்'' 'தினகரன்' ஆகியஏடுகள் வெளியிட்டுள்ள பொய்ச்செய்தியை போலீஸ்டைரக்டர்ஜெனரல் (டி ஜி பி) மோகன்தாஸ் மறுத்தார்.

தன்னைப் பற்றி பொய்யாக 'எக்ஸ்பிரஸ்'' தினகரன் ஏடுகள் வெளியிட்டுள்ள செய்தியை மறுத்து டி.ஜி.பி.மோகன்தாஸ் விடுத்துள்ள பத்திரிகைக் குறிப்பு வருமாறு:

சிங்கப்பூருக்கு நான் மர்மமானமுறையில்சென்றுள்ளதாக வெளியான செய்தியைக் கண்டு திகைப்படைந்தேன்.

மேலும் அந்தசெய்தியில் மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் பெயரையும் அவசியமின்றி சம்பந்தப்படுத்தி யூகங்கள் வெளியிடப்பட்டுள்ளது.

இச்செய்தி உள்நோக்கம் கற்பிப்பதாகவும் விஷமத்தனமானதாகவும் உள்ளதுஎன்பதைத்தெரிவித்து கொள்கிறேன்.

இவ்வாறு டி. ஜி பி மோகன்தாஸ் அறிவித்துள்ளார்.



மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற பட்டமளிப்பு விழாவில் ஜப்பான் நரம்பியல் நிபுணர் டாக்டர்கானுவுக்கு அமைச்சர் பொன்னையன் கவுரவ டாக்டர் பட்டம் வழங்கினார்

## சாத்தனூர் அணை திறப்பு

சென்னை, டிச. 7- சாத்தனூர் இடது கரைக் கால்வாய் பாசனத்திற்காக திறந்து விடப்பட்டுள்ளதாக அரசு அறிவிப்பில் கூறப்பட்டுள்ளது. ஏப்ரல் 20தேதிவரை பாசனத்திற்கு இந்த அணையிலிருந்து நீர்விடப்படுமென்றும், இதன் மூலம 24 ஆயிரம் ஏக்கர் நிலத்திலுள்ள பயிர்களுக்கு பாசனத்துக்கு நீர் கிடைக்குமென்றும் அரசு அறிவிப்பில் கூறப்பட்டுள்ளது.

## பிரதமர் ராஜீவுக்கு புரட்சிதலைவர் கடிதம்

மதுரை, டிச. 7- சென்னையில் சுப்ரீம் கோர்ட்டு கிளை அமைப்பை நிறுவ வேண்டும் என்று பிரதமர் ராஜீவ் காந்திக்கு முதல்வர் புரட்சித்தலைவர் கடிதம் எழுதியுள்ளார் என்று அமைச்சர் பொன்னையன் தெரிவித்தார்,

மதுரையில் அமைச்சர் பொன்னையன் நிருபர்களை சந்தித்து பேசினார். அப்போது அவர் கூறியதாவது:-

சென்னையில் சுப்ரீம் கோர்ட்டின் டிவிஷன் பெஞ்சு ஒன்றை நிரந்தரமாகவோ அல்லது சர்க்யூட் பெஞ்சோ குறிப்பிட்ட அதிகார வரம்போடு அமைக்கும் படியும் மதுரையில் ஐகோர்ட் பெஞ்சு ஒன்றை அமைக்கும் படியும் இரண்டு தினங்களுக்குமுன்பு பிரதமர் ராஜீவ் காந்திக்கும், மத்திய சட்ட அமைச்சருக்கும் முதல்வர் புரட்சித்தலைவர் கடிதம் எழுதியுள்ளார்.

### தமிழக அரசு தீவிரம்

மதுரையில் ஐகோர்ட் பெஞ்சு அமைக்கப்படுவதற்கான சாத்தியக் கூறுகள் இருப்பதால் விரைவில் இங்கு அமைக்கப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது

மேலும் இந்த விஷயத்தில் தமிழக அரசு மிகவும் தீவிரமாக உள்ளது.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன் கூறினார். மேலும் அவர்பேசும்போது

தமிழ் நாட்டில் மொத்தம் 14 மாஜிஸ்டிரேட் பதவிகள் காலியாக உள்ளன. அவற்றிற்கு தமிழ்நாடு தேர்வாணைக்குழு மூலம்தேர்வு நடைபெற்று வருவதால் தான் காலதாமதம் ஏற்படுகிறது. தமிழ்நாடு சர்வீஸ் கமிஷன் மூலம் 130 முன்சீப்புகளும்130 மாஜிஸ்டிரேட்டுகளும்தேர்வு செய்யப்படுவார்கள். எத்தனை இடங்கள் காலியாக இருக்கின்றனவோ அந்த இடங்கள் அவ்வப்போது இவர்களைக் கொண்டு நிரப்பப்படும்என்றும் கூறினார்-

### இருமொழி கொள்கை

மற்றொரு கேள்விக்கு பதிலளிக்கையில் இருமொழித்திட்டத்திற்கு சம அந்தஸ்து கொடுக்கப்பட வேண்டும் அதன்மூலம் இந்தி திணிப்பை தவிர்க்கலாம்

இவ்வாறு அமைச்சர் பொன்னையன் கூறினார்.

## 400ஜனதா கட்சியினர் இந்திரா காங்கிரசில் சேர்ந்தனர்

பம்பாய், டிச. 7- மகாராஷ்டிர மாநில முன்னாள் எம்.எல் ஏ.ஜெயந்திலால் மற்றும் பம்பாய்நகர முன்னாள் மேயர்கள் மனமோகன்சிங் பேடி, டாக்டர் எ. யு மேனன் உள்பட 400 ஜனதா கட்சியினர் நேற்று இந்திராகாங்கிரசில்சேர்ந்தனர்.

பம்பாயில் இருந்து செய்தி ஏஜென்சி நிறுவனம் ஒன்று இதை தெரிவித்துள்ளது

## இந்திரா காங்கிரசுடன் காங்கிரஸ் (எஸ்) இணைப்பு

ஔரங்காபாத். டிச 7- இந்திரா காங்கிரசுடன் காங்கிரஸ் (எஸ்) நாளை இணைகிறது இதற்கான நகல் தீர்மானம் நேற்று நடந்த காங்கிரஸ் (எஸ்) கமிட்டிகாரியக்கூட்டத்தில் இறுதி செய்யப்பட்டது

இந்திரா காங்கிரசுடன் காங்கிரஸ் (எஸ்) இணையும் கூட்டத்தில் பிரதமர் ராஜீவ், காஷ்மீர் முதல்வர் பரூக் ஆகியோர் பங்கேற்று பேசுவதாக சரத்பவார் தெரிவித்துள்ளார்.

## தி.மு.க. பிரமுகர்கள் அடிதடி - வழக்கு பதிவு

கோவை, டிச. 7- கோவை தி. மு. க. தலைவர்கள் அடிதடி சண்டையில் ஈடுபட்டனர். எஸ். ஏ. ராசமாணிக்கத்துக்கு சட்டை கிழிந்தது அவர் போலீசில் புகார் கொடுத்துள்ளார்.

இந்திரா காந்தியை கொலை செய்ய முயன்ற வழக்கில் கருணாநிதியோடு சம்பந்தப்பட்டவர்கள் கோவை மாவட்ட தி மு.க,செயலாளர் கண்ணப்பன், ராமநாதன், மாணிக்கவாசகம் ஆகியோர். இவர்கள் சட்டத்தை எரித்ததற்காக கைதாகி சிறையில் உள்ளனர்

சென்னையில் நடக்கும் வழக்கிற்கு வருமாறு ''சம்மன்'' வந்திருந்தது அதைத்தொடர்ந்து அவர்கள்போலீஸ் காவலுடன் சென்னைக்குக் கொண்டு போக கோவை ரயில்நிலையத்துக்கு கொண்டு வரப்பட்டார்கள்.

அப்போது அவர்களை வழியனுப்ப தி மு.க. பிரமுகர் எஸ் ஏ.ராசமாணிக்கம், நடராஜன் எம்,எல்.ஏ ஆகியோர்வந்திருந்தனர்.

### வசூல் கொள்ளைகள்

ரயில் நிலையத்தில்அவர்கள் சட்ட எரிப்பு பற்றியும் கருணாநிதியின் வசூல் கொள்ளைகள் பற்றியும் பேசிக் கொண்டிருந்ததாக தெரிகிறது.

இந்தப்பேச்சு காரசாரமாகி விட்டது ஒருவரை ஒருவர் திட்டிப்பேச ஆரம்பித்தனர். எவரும் காது கொடுத்துக் கேட்க முடியாத அளவுக்கு திமுக பெருந்தலைவர்கள் பதப்பிரயோகம் செய்தனர்.

'திடீர்' என்று ஒரு தி. மு. க: பிரமுகர், ராசமாணிக்கம் மீது பாய்ந்தார். ராசமாணிக்கத்தை அடித்து உதைத்தார். ராசமாணிக்கத்தின் சட்டை கிழிந்தது

அடி உதை தாங்க முடியாமல் ராசமாணிக்கம் அலறி அடித்துக் கொண்டு ஓடினார். அவரை துரத்தித் துரத்தி அடித்தனர்.

உடனே அவர் ரயில் நிலையப்போலீஸ்நிலையத்திற்குச்சென்றுபுகார் செய்தார்.

நடராஜ் மீது சட்ட விரோதமாக தடுத்து வழிமறித்தது (341 வது செக்ஷன்) அடித்து உதைத்தது (323 வது செக்ஷன்) குற்றங்களுக்காக வழக்குப் பதிவு செய்தனர்.

இதுகுறித்து போலீசார் மேலும் வழக்குப் பதிவு செய்து புலன் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

## புத்தக வெளியீட்டு விழா

சென்னை. டிச. 7- கவிஞர் மணிமொழி எழுதிய 'மண்ணுக்கு வந்த மனித நிலா' என்ற கவிதை நூல் வெளியீட்டு விழா 8ம்தேதி மாலை 6 மணிக்கு நடைபெறுகிறது.

சென்னை மாவட்ட மத்திய நூலக அரங்கில் நடைபெறும் இந்த விழாவுக்கு திருப்பூர் மணிமாறன் தலைமை வகிக்கிறார். வரவேற்புரையை புதிய பூமி பதிப்பக உரிமையாளர் நாஞ்சில் நீ. மணிமாறன் நிகழ்த்துகிறார்.

நிதிஅமைச்சர் டாக்டர் நாவலர் புத்தகத்தை வெளியிடுகிறார். புதுவை மாநில முதல்வர் பாரூக் முதல் பிரதியை பெற்றுக் கொள்கிறார்.

வாழ்த்துரையை முன்னாள் முதல்வர் பக்தவத்சலம் மற்றும் எட்மண்ட், பி. கே.லோகநாதன் எம். எல் ஏ., கோடம்பாக்கம் குமார். என் வி.என் செல்வம் ஆகியோர் வழங்குகிறார்கள்.

## கோச்சி பல்கலைக்கழக துணைவேந்தர் ராஜினாமா

கொச்சி, டிச. 7- கேரள மாநிலத்தில் உள்ள விஞ்ஞானம் மற்றும் தொழில்நுட்ப படிப்புக்கான கொச்சி பல்கலைக் கழக துணை வேந்தர் டாக்டா கே கோபாலன் தனது பதவியை நேற்று ராஜினாமா செய்தார்.

பல்கலை கழகம் சம்பந்தமாக கேரள சட்டசபையில் இயற்றப்பட்ட சட்டத் திருத்தத்தை எதிர்த்து அவா ராஜினாமா செய்தார்.

தேசியத்துக்கும்அரசியல் நிர்ணய சட்டத்துக்கும் எதிராக சட்டசபைஇந்தப் புதிய சட்டத்தை நிறைவேற்றியிருக்கிறது இதனால் கல்வி வளர்ச்சிபாதிக்கும். பல்கலைக்கழகமான்ய கமிஷனுக்கும் இது எதிரானது என்றும் டாக்டர் கோபாலன் தெரிவித்திருக்கிறார்.

## எரிப்புபோராட்டம்:புதுவைதி.மு.க. எம்.எல்.ஏக்கள் பங்கேற்க மறுப்பு

சென்னை,டிச.7- கருணாநிதி அறிவித்த சட்ட எரிப்புப் போராட்டத்தில் பங்குபெற மாட்டோம் என்று பாண்டிச்சேரி தி.மு க எம். எல். ஏ.க்கள் அறிவித்து விட்டனர்.

மத்திய அரசின் நேரடி நிர்வாகத்தின் கீழ் செயல்படும் யூனியன் பிரதேசமான பாண்டிச்சேரியில் தி.மு.க. சட்ட எரிப்பு போராட்டம் நடத்தப்போகிறது.

நாளை (திங்கட்கிழமை) சட்டத்தைஎரிக்கப் போகிறார்களாம்.

இந்தி வந்த பின்னும் இந்த தேகம் இருந்தென்னலாபம் என்று கருணாநிதி எழுதியும் பேசியும் பார்த்தார்

இந்தித் திணிப்பை ஏற்காத மாநில அரசுகள் இருப்பதனால் கருணாநிதியின் இந்தி எதிர்ப்புவேடத் தின் சாயம் வெளுத்துப் போயிற்று

திமுககாரர்களே கருணாநிதியை கேலியும் கிண்டலும் செய்கிற நிலை ஏற்பட்டுள்ளது.

கருணாநிதி அறிவித்த சட்ட எரிப்புப் போராட்டத்தில் கலந்து கொள்ள மாட்டோம் என்று பாண்டிச்சேரி தி மு க எம்.எல்,ஏக்கள் மறுத்து விட்டார்கள்.

தி மு க எம்.எல்,ஏக்கள் பங்கேற்காமல்சட்டஎரிப்பு போராட்டம் நடத்தப் போகிறது தி மு.க

''இந்தியை எதிர்த்து தேகத்தை இழக்கத் தயார் என்று பேசத் தயார். ஆனால் சட்டத்தைஎரித்து அதன் மூலம் பதவியை இழக்கத் தயாரில்லை'' என்று தி மு க எம். எல். ஏக்கள் கூறுகிறார்கள்.

## விளையாட்டு வீரர்களுக்கு கார் பரிசு

புதுடெல்லி, டிச. 7- ஓட்டப்பந்தய வீராங்கனை குமாரி சைனி ஆபிரகாம், பிரபல பளுதூக்கும வீரர் பல்பீர்சிங் ஆகியோருக்கு இந்தியஉணவுக் கழகம் பிரிமியர் பத்மினி காரை வழங்கியுள்ளது.

இந்த இரு வீரர்களையும் கவுரவிக்கும் பொருட்டு நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்றில் மத்திய நாடாளுமன்ற விவகாரம் உணவு வழங்குதுறை அமைச்சர் எச் கே எல் பகத், உணவு வழங்குதுறை இணை அமைச்சர் குலாம் நபி ஆசாத் ஆகியோர் முன்னிலையில் இந்த பரிசு வழங்கப்பட்டது.

நியமனத்தின்போது, விளையாட்டு வீரர்கள்-வீராங்கனைகளுக்கு முன்னுரிமை வழங்கி பயிற்சியும் அளிக்குமாறு இந்திய உணவு கழக அதிகாரிகளை அமைச்சர் பகத் கேட்டுக்கொண்டார்.

## மத்திய அமைச்சர்களுக்கு இலங்கை அவசர அழைப்பு

புதுடெல்லி. டிச 7- இலங்கை ஜனாதிபதி ஜெயவர்த்தனேவின் அழைப்பை ஏற்று இலங்கைத்தமிழர் பிரச்சினைப் பற்றி பேச்சுவார்த்தைநடத்தமத்திய அமைச்சர்கள் ப, சிதம்பரம் நட்வர்சிங் ஆகியோர் அடுத்த வாரம் கொழும்பு செல்கிறார்கள்,

இலங்கைத் தமிழர் பிரச்சினைக்குவிரைவாக தீர்வு காண்பதில் மத்திய அரசும தமிழக அரசும் தீவிர நடவடிக்கைகளை எடுத்து வருகின்றன

மத்திய அமைச்சர்களும் இலங்கை ஜனாதிபதி ஜெயவர்த்தனே மற்றும் பாதுகாப்பு அமைச்சர் அதுலத்முதலி ஆகியோரும் பலமுறை பேச்சுவார்த்தை நடத்தினார்கள்,

இலங்கை அரசு கொடுத்துள்ள புதிய ஆலோசனை திட்டங்கள் பற்றியும் அவர்கள் விவாதித்தனர்.

தமிழர்கள்பகுதிகளைஒன்றாக இணைத்து தமிழர் மாநிலமாகஏற்படுத்துவது தனி தமிழ் ஈழம் ஆகியவற்றைவிடுதலைப்புலிகள் இயக்கத்தினர் வலியுறுத்தி வருகிறார்கள் இதற்கு ஜெயவர்த்தனே அரசு ஒப்புக் கொள்ளவில்லை; தனி மாநிலங்கள் ஏற்படுத்தி அவற்றிற்கு இந்திய அரசியல் நிர்ணய அமைப்பு முறை போல் அதிகாரம் வழங்கப்படும் என்று ஜெயவர்த்தனே தெரிவித்திருக்கிறார் இதில் சமரசம் எதுவும் ஏற்படுவது சாத்தியப்படவில்லை

இலங்கை தமிழர் பிரச்சினை பற்றி மீண்டும் ஆலோசனை நடத்த மத்திய அமைச்சர்கள் ப,சிதம்பரம்,நட்வர்சிங், ஆகியோருக்கு ஜனாதிபதி ஜெயவர்த்தனே அழைப்பு அனுப்பியிருக்கிறார்.

இதைத் தொடர்ந்து அமைச்சர்கள் சிதம்பரமும். நட்வர்சிங்கும் அடுத்த வாரம் கொழும்பு செல்லவிருக்கிறார்கள்.

இந்த ஆலோசனைக் கூட்டம் வரும் 17, 18, 19 ஆகிய தேதிகளில் நடைபெற இருக்கிறது.

அதற்கு முன்னதாக மத்திய அமைச்சர்கள் சென்னை வந்து தமிழ் போராளிகளுடன் பேசவிருக்கிறார்கள்.

இம்மாதம் 12 அல்லது 13-ம் தேதிகளில் மத்திய அமைச்சர்கள் சிதம்பரம் நட்வர்சிங் மற்றும் மூத்த அதிகாரிகள் சென்னையில் உள்ள தமிழ் போராளிகளுடன் பேச்சுவார்த்தை நடத்துவார்கள்.

தமிழ் போராளிகளின் திட்டவட்டமான முடிவை ஏற்றுக்கொண்ட பின்னரே கொழும்பு செல்லும் மத்திய அமைச்சர்கள் இலங்கை அரசுடன் மேற்கொண்டு விவாதிக்க சாத்தியப்படும் என்றும் அரசியல் வட்டாரங்கள் தெரிவித்துள்ளன.



## நிருபர்கள் சங்கத்துக்கு இளைஞர் முஸ்லீம் டி.வி.நன்கொடை

சென்னை டிச, 7- சென்னை நிருபர்கள் சங்கத்துக்கு சென்னை நகர இளைஞர் மீலாது கமிட்டி சார்பில் தொலைக்காட்சி பெட்டி நன் கொடையாக வழங்கப் படுகிறது.

நாளை (8ந் தேதி) அரசினர் தோட்டத்திலுள்ள நிருபர் சங்க கட்டிடத்தில் நடைபெறும் விழாவில் தொலைக்காட்சி பெட்டி வழங்கப் படுகிறது.

அமைச்சர் திருநாவுக்கரசு விழாவில் பங்கேற்று மலரை வெளியிட்டு தொலைக்காட்சி பெட்டியைத் துவக்கி வைக்கிறார். விழாவில் சென்னை நகர இளைஞர் மீலாதுகமிட்டி தலைவர் கே ஏ சாகுல் அமீது, துணைத் தலைவர் எம். பி ஹபீப் ஆகியோரும் பங்கேற்கின்றனர்.

## எம்.ஜி.ஆர். இளைஞர் அணி சென்னை மாவட்ட- பகுதி நிர்வாகிகள் கவனத்திற்கு

சென்னை மாவட்ட எம். ஜி. ஆர். இளைஞர் அணியினர் மாவட்ட மற்றும் பகுதி நிர்வாகிகள் ஆலோசனைக் கூட்டம் 9-12-86 அன்று மாலை 4 மணியளவில் சின்னமணி வள்ளியம்மாள் திருமண மாளிகை, பஜனை கோயில் தெரு, சூளைமேட்டில் நடைபெறும்.

சென்னை மாவட்ட எம் ஜி.ஆர். இளைஞர் அணி மாவட்ட நிர்வாகிகளும், பகுதி நிர்வாகிகளும் தவறாது கலந்து கொள்ள அன்புடன் வேண்டுகிறேன்.

ஜே.சி.டி. பிரபாகரன்
செயலாளர்

எம். ஜி. ஆர். இளைஞர் அணி
அனைத்திந்திய அண்ணா தி..மு. கழகம்

## கைதான தி.மு.க நபர்கள் திடீர்பல்டி

சென்னை டிச. 7- இந்தித்திணிப்பை எதிர்த்துப் போராடி எந்த தண்டனையையும் ஏற்கத் தயார் என்று மேடையில் வீரவசனம் பேசிய தி.மு க. சூராதிசூரர்கள் கோர்ட்டில் நின்றதும் 'பல்டி' அடிக்க ஆரம்பித்து விட்டனர்

சட்டத்தை எரித்து கைதான அந்த ஆசாமிகள் 'சட்டத்தையா. .நாங்களா எரித்தோம். இல்லவே இல்லை. நாங்கள் குற்றவாளிகள் அல்ல! என்று கூறி குப்புற விழுந்து பல்டி அடித்து விட்டனர்.

சுய விளம்பரத்துக்காக சட்ட எரிப்பு போராட்டத்தை தி மு கவினர் நடத்திவருவதுதெரிந்ததே சட்டத்தைஎரித்த தி.மு க.வினர் சென்னை ஜார்ஜ்டவுன் கோர்ட்டுக்கு கொண்டு வரப்பட்டனர்.

நீதிபதி செந்தில்வேலன் முன்பு ''நாங்கள் குற்றவாளிகள் அல்ல சட்டத்தை எரிக்கவில்லை காகிதத்தைத் தான் எரித்தோம்'' என்று எல்லோரும் கூறினார்கள்.

ராயபுரத்தில் சட்டத்தை எரித்த 57 பேரில்56 பேர்கள் நாங்கள் குற்றவாளிகள் அல்ல என்றனர்

சட்டத்தை எரித்தோம் என்று உண்மையை ஒத்துக் கொள்ளும் உறுதி சில திமுகவினருக்காவது இருக்கும் என்று எதிர்பார்த்து வந்திருந்த அனைவரும் ஏமாந்தனர்

கருணாநிதி சொல்லிக் கொடுத்தபடி 'நாங்கள் சட்டத்தை எரிக்கவில்லை வெறும் தாளைத்தான் எரித்தோம் ''நாங்கள் குற்றவாளிகள் அல்ல'' என்று அவர்கள் பல்டி அடித்தனர்.

இவர்கள் மட்டுமல்ல இவர்களுக்கு முன்னதாக இவர்களின் பொதுச் செயலாளர் அன்பழகன் சட்டத்தைஎரித்துகைதாகி நீதி மன்றத்திற்குவந்ததும் நான் சட்டத்தை எரிக்கவில்லை வெறும் தாளைத் தான் எரித்தேன் என்று வாக்குமூலம் கொடுத்திருந்தது தெரிந்ததே

தலைவர்களின் வழியில் தொண்டர்களும் பல்டி அடிக்கிறார்கள்

இவர்களாவது இப்படி. கருணாநிதியோ சட்டத்தை எரிக்கப்போகு முன்பே ''நான் சட்டத்தை எரிக்கப் போகவில்லை வெறும் தாளைத்தான் எரிக்கப்போகிறேன்' என்று அந்தர்பல்டி ஆகாச பல்டி அடித்து வருகிறார்,

## 57லட்சம் டன் அரிசி உற்பத்திக்கு திட்டம்

திருச்சி டிச. 7- நடப்பு ஆண்டில் தமிழகத்தில் மொத்தம் 57 லட்சம் டன் அரிசி உற்பத்தி செய்யதிட்டமிடப்பட்டுள்ளதாக விவசாய இயக்குனர் ஆதிமூலம் தெரிவித்துள்ளார்.

திருச்சி மாவட்ட சம்பா நெல்சாகுபடிகருத்தரங்கில் விவசாய இயக்குனர் ஆதிமூலம் பங்கேற்று பேசினார். அவர் பேசுகையில் நடப்பு ஆண்டில் தமிழகத்தில் மொத்தம் 22 லட்சம் ஹெக்டேர்களில் சம்பா சாகுபடி செய்யப்படுமென்றும் ஏற்கனவே 16 லட்சம் ஹெக்டேரில் சம்பா பயிரிடப்பட்டுள்ளதாகவும் கூறினார்.

1986-87-ம் ஆண்டில் தமிழ்நாட்டில் அரிசி உற்பத்தி 57 லட்சம் டன்களாக இருக்குமென்றும் சென்ற ஆண்டு 56 லட்சம் டன்களாக இருந்தது என்றும் மேலும் அவர் கூறினார்.

தமிழகத்தில் 29 மண் பரிசோதகர் போதனைக் கூடங்கள் இருந்தும் கூட விவசாயிகளில் 13 சதவிகிதம் பேர் தான் இதை பயன்படுத்திக் கொண்டிருப்பதாகவும் ஆதிமூலம் வருத்தம் தெரிவித்தார்

விவசாய இலாகாவில் நடத்தப்படும் இந்த மண் பரிசோதனைக் கூடங்கள் மண் பரிசோதனைக்காக விவசாயிகளிடம் 1 ரூபாய் கட்டணம் வசூல்பதாகவும் ஆனால் இலாகாவுக்கு இதற்கு 5 ரூபாய் செலவாவதாகவும் அவர் தெரிவித்தார்.

## சரத்ஜோஷி உள்பட 154பேர் கைது

நாகபுரி, டிச, 7- பருத்திக்கு அதிக விலை நிர்ணயம் செய்யப்பட வேண்டும் என்று மகாராஷ்டிர மாநிலத்தில் ஷேத்காரி சங்காதனா கட்சியினர் போராட்டம் நடத்தி வருகிறார்கள்.

இந்தக் கட்சியினர் இன்று சாலை போக்குவரத்தை தடுத்து நிறுத்தும் போராட்டத்தை நடத்த இருந்தனர். இன்று முதல் 5 நாட்களுக்கு இந்த போராட்டம் நடக்கும் என்றும் சாலைகளில் வாகனம் செல்லாமல் தடுத்து நிறுத்துவோம் என்றும் அவர்கள் அறிவித்திருந்தனர்

இதைத் தொடர்ந்து ஷேத்காரி சங்காதனா கட்சித்தலைவர் சரத்ஜோஷி உள்பட 154 பேர்களை போலீசார் கைது செய்தனர். சரத்ஜோஷி நாகபுரி சிறையில் வைக்கப்பட்டார் என்றும் ஒரு அதிகாரி கூறினார்.

## தமிழகஇளைஞர் சமாதான ஒளிப்பந்தம்

புதுடெல்லி, டிச. 6- தமிழகத்தைச் சேர்ந்த தர்மபுரியில் இருந்து இளைஞர்கள் எடுத்துச் சென்ற சமாதான ஒளிப் பந்தத்தை பிரதமர் ராஜீவ் காந்தியிடம் அவர்கள் இன்று காலை அளித்தனர். கடந்த 27ம் தேதி தர்மபுரியில் இருந்து துவங்கி சுமார் 3 ஆயிரம் கிலோ மீட்டர் கால்நடையாகவே சென்று இந்த இளைஞர்கள் சமாதான ஒளிப்பந்தத்தை ராஜாராம் கொடுதார்.

## கோவில் சிலைகள் அபேஸ்

நெல்லூர், டிச. 7- கூடூர் அருகே ஒரு கிராமத்தில் சென்னகேசப்பசுவாமி கோவில் உள்ளது. அந்தக் கோவிலில் இருந்த சென்னகேசவசுவாமி சிலைகள் ஸ்ரீதேவி தாயார், சந்திரப்பிரியாத் தாயார் ஆகிய சிலைகள் திருட்டு போயின. கோவில் கதவை உடைத்து திருடர்கள் அதைக் கொள்ளையிட்டுள்ளனர்

## ரூ. 100 கோடியில் வீட்டு வசதி திட்டம்

சென்னை. டிச. 7- மூன்றாண்டுகளில் முப்பது லட்சம் வீடுகள் கட்டும் பெரும திட்டத்தின் கீழ் இந்த ஆண்டில் மட்டும் சுமார் நூறுகோடி ரூபாய் செலவிடப்பட இருப்பதாக அமைச்சர் திருநாவுக்கரசு தெரிவித்தார்

நந்தனம் விரிவாக்கத்திலுள்ள வீட்டு வசதி சமுக கூடத்தில் நடைபெற்ற வளர்ச்சிப் பணிகள் பற்றிய ஆய்வு மற்றும் கலந்துரையாடல் கூட்டத்தில் அவர் மேற்கண்ட தகவலைத் தெரிவித்தார்.

வீட்டுவசதி வாரியத்தின் திட்டப்பணிகள் தற்போது தாலுகா அளவுக்கு விரிவுபடுத்தப்பட்டுள்ள சென்னை தவிர மேலும் 43 நகரங்களுக்கு வீட்டு வசதி வாரியப் பணிகள் விரிவுபடுத்தப்படவுள்ளது என்று அமைச்சர் திருநாவுக்கரசு தெரிவித்தார்.

**பஸ்விபத்தில் 16 பேர் சாவு**

# இறந்தவர்களின் குடும்பத்திற்கு அரசு நிதி

சென்னை, டிச. 7- செங்கல்பட்டுமாவட்டம் சிங்கப்பெருமாள் கோவில் வரசித்தி விநாயகர் கோவில் அருகே பஸ்சும் லாரி ஒன்றும் மோதிக் கொண்டதில் 16 பேர் இறந்தனர் இறந்தவர்களின் குடும்பத்திற்கு அரசு நிதிவழங்கும்என்று அமைச்சர் ஆனூர் ஜெகதீசன் கூறினார்.

சென்னையிலிருந்து பாண்டிச்சேரிக்குச் சென்ற தந்தை பெரியார் போக்குவரத்து கழக பஸ்சும் மணல் லாரி ஒன்றும் செங்கல்பட்டை அடுத்த சிங்கப் பெருமாள் கோவில் வரசித்தி விநாயகர் கோவில் அருகேநேற்று பகல் 12 30 மணி அளவில் மோதிக்கொண்டன.

இந்த விபத்தில் 16 பேர் இறந்துள்ளனர் இந்த சம்பவம் பற்றி கேள்வியுற்ற அமைச்சர் ஆனூர்ஜெகதீசன் செங்கல்பட்டு மருத்துவமனைக்குச் சென்று காயமடைந்தவர்களுக்கு ஆறுதல் கூறினார். பலத்த காயமுற்றவர்களை சென்னை பெரிய ஆஸ்பத்திரிக்கு அனுப்பி சிகிச்சைக்கு ஏற்பாடு செய்தார்.

விபத்தில்சிக்கியவர்களின் உறவினர்கள் பாண்டிச்சேரியிலிருந்தும் சென்னையிலிருந்தும் செங்கல்பட்டு ஆஸ்பத்திரிக்கு கட்டணம் இல்லாமல் வர ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

இறந்தவர்களின் குடும்பத்திற்கு அரசு நிதி உதவி செய்யுமென்று அமைச்சர் ஆனூர் ஜெகதீசன் கூறினார்.

இந்த சம்பவம் பற்றி சம்பவம் நிகழ்ந்த இடத்தின் அருகே வசிக்கும் சாந்தி என்ற பெண் கூறுகையில் 'குண்டு வெடிப்பது போல் சத்தம் கேட்டதாகவும், அதைக் கண்டு தான் வீட்டைவிட்டு வெளியே வந்து பார்த்த போது ஓடும் பஸ்சிலிருந்து பிணங்கள் விழுந்ததாகவும் கூறினார்.

# இலங்கையில் ஏராள தமிழ் மாணவர் கைது

கொழும்பு,டிச.7- இலங்கை மட்டக்களப்பு மாவட்டத்தில் ஏராளமான தமிழ்மாணவர்களை இலங்கை பாதுகாப்பு படையினர் கைது செய்துள்ளனர்.

இலங்கையில் ராணுவத்தினர் அட்டூழியம்நாளுக்கு நாள் பெருகி வருகிறது. மட்டக்களப்பு மாவட்டத்திலுள்ள கல்முனை என்ற இடத்தில் மட்டக்களப்பு நகர் நோக்கி வந்து கொண்டிருந்த ஒரு பஸ்சை பாகிஸ்தானில் பயிற்சி பெற்ற விசேஷ போலீஸ் கமாண்டோக்கள் களவாஞ்சிக்குடி அருகே வழிமறித்து துப்பாக்கி சூடு நடத்தினர் இதில் ஏழு அப்பாவித் தமிழர்கள் கொல்லப்பட்டனர் இத்தகவலை தமிழீழ விடுதலை புலிகள் நிறுவனம் தெரிவித்துள்ளது.

## மக்கள் அதிருப்தி

மட்டக்களப்பு மாவட்டம் நீலவாளையில் இலங்கை பாதுகாப்புப் படையினர் ஏராளமான மாணவர்களை கைதுசெய்துள்ளனர். தேர்வுகள் நடைபெற இருக்கும் நிலையில் பாதுகாப்பு படையினர் மேற்கொண்டுள்ள இந்த நடவடிக்கை பெரும் அதிருப்தியை ஏற்படுத்தி உள்ளது.



# நிலக்கரி இறக்குமதி: கழகஎம்.பி.கோரிக்கை

புதுடெல்லி. டிச. 7- தமிழகத்திற்கு தேவையான நிலக்கரியை உடனே வழங்க மத்திய அரசுநடவடிக்கைஎடுக்க வேண்டுமென்றுமாநிலங்களவையில் கழககுழுத் தலைவர் ஆலடி அருணா வலியுறுத்தினார்.

மாநிலங்கள் அவையில் விவாதிக்கப்பட்ட நிலக்கரி சுரங்க தேச உடைமை சட்ட திருத்த மசோதாவில் கழக குழுத்தலைவர் ஆலடி அருணா பேசியதாவது:

நிலக்கரி சுரங்க தேச உடைமை சட்டத்தின் சில விதிகள் சம்பந்தமாக உச்ச நீதிமன்றம் அளித்த தீர்ப்பினை ஒட்டி இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது, இதுகாலத்தின் தேவை, தொழில் வளர்ச்சிக்குஅவசியம். இந்த மசோதாவைஎதிர்ப்பதற்கு எதுவும் இல்லை. ஆதரிக்க கடமைப் பட்டிருக்கிறேன்.

இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்தி மிகவும்மோசமாக இருக்கும் நிலக்கரி சுரங்க தொழில் குறித்து கூற விரும்புகிறேன்.

உலகிலேயே நிலக்கரி வளம் உள்ள நாடுகளில் இந்தியா ஆறாவது இடத்தில் இருக்கிறது. என்று பெருமை பட்டுக் கொள்கிறோம். ஆனால் நமது உற்பத்திஎன்ன? உற்பத்திக்கான செலவு என்ன? தொழிலாளியின் திறன் என்ன? இவைகளை ஆய்வு செய்தால் நமதுசாதனைப் பட்டியல் ஏமாற்றத்தைத் தருகிறது.

நிலக்கரி சுரங்கங்கள் தேசிய உடைமை ஆக்கப் பட்ட 1973 ஆம் ஆண்டிலிருந்து நட்டத்தில்தான் செயல்படுகிறது. இந்த நிதியாண்டு முடிய ரூபாய் 1500 கோடி நட்டம் ஏற்பட்டுள்ளது. இதற்கு காரணங்கள் என்ன? யார் பொறுப்பாளி? இதனை ஆராய்ந்தால் பல கசப்பான உண்மைகள் வெளியாகின்றன, மிகவும் குறைவாக உள்ள தொழிலாளியின் உற்பத்தி திறன். அளவிற்கு மீறிய தொழிலாளர்கள் எண்ணிக்கை, நவீனமற்றஇயந்திரங்கள், ஆய்வு செய்யப்படாத கணக்கு முறை. இவைதான் இந்த பரிதாப நிலைக்கு காரணங்களாகும்.

## நிலக்கரி தேவை

இந்தசந்தர்ப்பத்தில் தமிழகத்தின் நிலக்கரி தேவை பற்றி குறிப்பிட விரும்புகிறேன். ஏற்கனவே இது பற்றி அமைச்சரிடம் நேரில் பேசினேன். உதவி செய்வதாக உறுதி அளித்திருக்கிறார்.

கோல்இந்தியா கம்பெனியிலிருந்து தமிழ்நாட்டிற்கு சரியாகவும் - தேவையான அளவும் நிலக்கரி தரப்படுவதில்லை அதன் தரம் மிகவும் குறைவானதுஇதைவிட தரக் குறைவானது என்னவென்றால் நிலக்கரியை வழங்கும்போது மோசடி செய்யும் சில வியாபாரிகளைப் போல் கோல் இந்தியா நிலக்கரியுடன் கற்களையும் கலந்து கொடுகிறது. தூத்துக்குடியில் உள்ள அனல் மின்சார நிலையத்திற்கு மட்டும் சுமார் ரூபாய் 3 கோடி மதிப்புள்ள நிலக்கரிக்குப் பதிலாக கற்கள் கொடுக்கப்பட்டிருக்கிறது

## கூடுதல் விலை

மேட்டூரில் அமைக்கப்பட்டிருக்கும் அனல் மின்சார நிலையத்தை இம்மாதம் இயக்க முடிவு செய்திருக்கிறோம் அதற்கான நிலக்கரி சிங்கரே நிலக்கரி சுரங்கத்திலிருந்து சரியாக வரவில்லை எனவே எண்ணூரில் உள்ள நிலக்கரியை மேட்டூருக்கு அனுப்பியுள்ளோம். இதனால் எண்ணூர் அனல்மின் நிலையத்திற்கு ஒரிசாவிலிருந்து நிலக்கரி வரவழைக்க வேண்டிய நிர்ப்பந்தம் உள்ளது. டன் ஒன்றுக்கு ரூபாய் 320 அதிகமாக செலவாகிறது ஆண்டு ஒன்றுக்கு ரூபாய் 15 கோடிக்கு நட்டம் ஏற்படுகிறது நட்டத்தை குறைக்கவும். உற்பத்தியை பெருக்கவும் முறையாக நிலக்கரி வழங்கப்பட வேண்டும்,

## இறக்குமதிக்கு அனுமதி

தமிழ்நாட்டில்தற்போது நீர்மின்சாரம் மிகவும் குறைந்து விட்டது. தற்போது மழை காலம். இந்த சந்தர்ப்பத்தில் தான் நீர் மின்சாரம் அதிகம் உற்பத்தி செய்வோம். ஆனால் இந்த ஆண்டு எந்த நீர்த் தேக்கத்திலும் தண்ணீர் இல்லை எனவே அனல் மின்சாரஉற்பத்தியை நம்பி இருக்கிறோம்.

குறைந்த விலையில்தேவையான அளவு தமிழ்நாட்டிற்கு நிலக்கரி கிடைக்க ஆஸ்டேரியாவிலிருந்து இறக்குமதி செய்ய தமிழக அரசு அனுமதி கேட்டது ஆனால்,இன்னும் தரப்படவில்லை. எங்களின் உறுப்பினர் நாஞ்சில்வின் சென்ட் கேள்விக்கு அளித்தபதிலில் உள்நாட்டிற்கு தேவையான நிலக்கரி உள்ளது. எனவே இறக்குமதிதேவை இல்லை என்று கூறப்பட்டிருக்கிறது,

ஆஸ்டேரியாவிலிருந்து நிலக்கரிஇறக்குமதி செய்ய தமிழகத்திற்கு மறுக்கும மத்திய அரசு இரும்புத் தொழிற்சாலைகளுக்கு மூன்று மில்லியன் டன நிலக்கரிஇறக்குமதி செய்ய அனுமதித்துள்ளது.

எனவே தமிழகத்திற்கு உடனடியாக நிலக்கரி தருவதுடன். ஆஸ்டேரியாவிலிருந்துஇறக்குமதி செய்ய அனுமதிக்க வேண்டுகிறேன்

இவ்வாறு ஆலடிஅருணா பேசினார்,

# டெல்லியில்பதட்ட நிலை: தயார் நிலையில்ராணுவம்

புதுடெல்லி, டிச. 7- டெல்லியில் கலவரம் ஏற்பட்டதைத் தொடர்ந்து பல்வேறு பகுதிகளில் பதட்டநிலை ஏற்பட்டுள்ளது. முக்கிய பகுதிகளில் ராணுவத்தினர் நிறுத்தப்பட்டுள்ளனர் தீவிர பந்தோபஸ்து வேலைகளில் அவர்கள் ஈடுபடுத்தப் பட்டுள்ளனர்

பஞ்சாபில்பஸ் பயணிகள் 24 பேர்களை பயங்கரவாதிகள், சுட்டுக்கொன்ற தற்குஎதிர்ப்புதெரிவித்து டெல்லியில் பல்வேறு இடங்களில் கலவரம் மூண்டது இதைத் தொடர்ந்து வன்முறை சம்பவங்கள் நடந்தன.

கலவரத்தை அடக்க போலீசாரும் பாதுகாப்புப் படையினரும் தீவிரமாக ஈடுபட்டனர்.

டெல்லியின்முக்கிய பகுதிகளில் ஊரடங்கு உத்தரவு அமல் ஆக்கப்பட்டது. சாந்தினிசவுக் பகுதியில் ஊரடங்கு உத்தரவு கடுமையாக்கப்பட்டது

பயங்கரவாதிகளின் வெறித்தனத்தை கண்டித்து டெல்லியில் ஊர்வலம் நடைபெற்றது

சீக்கியர் கோவில் அருகே ஊர்வலம் வந்தபோது சீக்கிய தற்கொலை படையொன்று டிரக் வண்டியை குருத்துவாராவில் இருந்து கண்மூடித்தனமாக ஊர்வலத்தில் புகுந்து செலுத்தினார்கள் இதில் மத்திய ரிசர்வ் படையினர் 3பேர் அதே இடத்தில் நசுங்கி செத்தார்கள்

இதைத்தொடர்ந்து துப்பாக்கிச்சூடு நடந்தது, அதில் 2 பேர் மாண்டார்கள். வேறு ஒரு இடத்தில் நடந்த கலவரத்தின் போதும் 2 பேர் உயிரிழந்தனர்

பயங்கரவாதிகளின் அட்டகாசத்தைத் தொடர்ந்து நடந்த கலவரத்தினால் டெல்லியில் பதட்ட நிலை ஏற்பட்டுள்ளது. ஆனாலும் நகரம் முழுவதும் அமைதியை ஏற்படுத்துவதில் போலீசார் நடவடிக்கைகளை மேற்கொண்டனர்.

முன்னெச்சரிக்கையாக 60 பேர்களை போலீசார் கைது செய்தனர். தடுப்புக்காவல் சட்டத்தின் படி வேறு 6 வன்முறையாளர்களையும் போலீசார் கைது செய்தனர்.

## இரவும் பகலும் ரோந்துப்பணி

மேலும் வன்முறை சம்பவங்கள் நடக்காமல் இருக்க டெல்லியின் பல்வேறு பகுதிகளில் பாதுகாப்புப் படையினரும் போலீசாரும் பந்தோபஸ்து பணியில் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர். இரவும் பகலும் ஓயாமல் ரோந்து பணிகளில் ஈடுபட்டுள்ளனர்

ராணுவம் தயார் நிலையில் வைக்கப்பட்டுள்ளது.

மேற்கு டெல்லியில் திலக் நகர் போலீஸ் ஸ்டேஷன், டெல்லியின் கிழக்குப்பகுதியில் உள்ள காந்திநகர் போலீஸ் ஸ்டேஷன் ஆகியவற்றில் ராணுவவீரர்கள் நிறுத்தப் பட்டுள்ளனர்.

சீக்கியர் கோவில்களான குருத்துவாரா பங்களா சாகேப் மற்றும் குருத்துவாரா ரகப்காஞ்ச் ஆகியவற்றை சுற்றியுள்ள பகுதிகளில்காலவரையற்ற ஊரடங்கு உத்தரவு அமல் படுத்தப்பட்டுள்ளது.

## நீதிபதி உத்தரவு

சாந்தினி சவுக் பகுதியில் நேற்று 2 முறை ஊரடங்கு உத்தரவு தளர்த்தப்பட்டது. பொதுமக்கள் தங்களுக்கு தேவைப்படும்உணவுப் பொருட்களை வாங்கி கொள்ளுவதற்கு வசதி செய்யபபட்டது.

முன்னெச்சரிக்கையாக கைது செய்யப்பட்ட 60 பேர்களையும் குற்றவியல் மாஜிஸ்திரேட் வரும் 10-ம் தேதி வரை காவலில் வைக்க உத்தரவிட்டார்.

கடந்த வெள்ளிக்கிழமை நடந்தகலவரத்தின் போது படுகாயம் அடைந்த 11 பேர்களும் ராம்மனோகர் லோகியா மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளனர்.

டெல்லி நகரம் முழுவதும் அமைதி நிலவுவதாகவும் நிலைமை கட்டுப்பாட்டுக்குள் இருப்பதாகவும் ஒரு போலீஸ் அதிகாரி கூறினார்.

# அமெரிக்க இந்தியர் அதிபர்ரீகனிடம்மகஜர்

நியூயார்க், டிச 7- பாகிஸ்தானுக்கு அமெரிக்கா நவீன ஆயுதங்களைத் தரக் கூடாது என்று கோரி அமெரிக்காவிலுள்ள இந்தியர்கள் அமெரிக்க ஜனாதிபதி ரீகனிடம் மனுக் கொடுத்துள்ளனர்

அமெரிக்கா பாகிஸ்தானுக்கு நவீன ஆயுதங்களையும். நவீன விமானங்களையும் வழங்குகிறது இதற்கு எதிர்ப்பு தெரிவித்து அமெரிக்காவில் வாழும் இந்தியர்கள் கையெழுத்து வேட்டை நடத்தி அதிபர் ரீகனிடம் கோரிக்கைகளைசமர்ப்பித்தனர்.

## சந்தன கட்டை கடத்தல்: 5 பேர் கைது

ஸ்ரீவில்லிபுத்தூர், டிச 7- காமராஜர் மாவட்டம் ஸ்ரீவில்லிபுத்தூர் அருகே சந்தன மரக்கட்டைகளை கடத்தியகும்பல்மீது வனத்துறை அதிகாரிகள் துப்பாக்கிச் சூடு நடத்தினார்கள்.

கடத்தல் காரர்கள் சிலர் ஒரு காரில் வந்து சந்தனக் கட்டைகளை தூக்கிச் செல்ல முயன்றதாகக் கூறப்படுகிறது. அவர்களை பிடிக்க அதிகாரிகள் முழு முயற்சி செய்தனர்.

கடத்தல் காரர்களின் தலைவன் என்றுகூறப்படும் ஆசாமி காரில் தப்பி ஓடி விட்டான்.

5 கடத்தல்ஆசாமிகள் பிடிபட்டனர். அவர்கள் கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டுள்ளனர்.

## திருமணம்

சேலம் டிச 7- இராசிபுரம் சட்டமன்ற உறுப்பினர் கே. பி ராமலிங்கத்தின் சகோதரன்கே. பி. பாலகிருஷ்ணனுக்கும். செல்வி இலங்கனி என்ற லதாவுக்கும், 10ம் தேதி 7 மணிகாலை அளவில் ராசிபுரம் வாசவி மகால் திருமண மண்டபத்தில் திருமணம்நடைபெறுகிறது.



# வளர்ந்த நாடுகளின் போக்கு: ஐ. நா. சபை கடும் கண்டனம்

நியூயார்க் டிச 7- வளரும் நாடுகளின் பொருளாதாரமுன்னேற்றத்துக்கு எதிராக வளர்ந்தநாடுகள் செயல்பட்டு வருகின்றன என்று ஐக்கிய நாடுகள் சபை கடும் கண்டனம் தெரிவித்துள்ளது.

ஐக்கிய நாடுகள்சபையின் இன்றைய கூட்டத்தில் வளரும் நாடுகள்பற்றிய பல்வேறுவிவரங்கள்விவரிக்கப்பட்டன.

வளரும்நாடுகள் அனைத்து துறைகளிலும் முன்னேற வேண்டுவதன்அவசியத்தை சபை வலியுறுத்தியது

வளர்ந்து வரும் நாடுகளின் முன்னேற்றத்தை சீர்குலைக்கும் வகையில் வளர்ந்தநாடுகள் சில ஈடுபட்டு வருவதை ஐ நா. கண்டனம் செய்தது.

வளர்ந்த நாடுகள் வர்த்தக கட்டுப்பாடுகளை ஏற்படுத்தக் கூடாது என்றும் ஐ.நா சபைவற்புறுத்தியது

நிக்காவுக்கு எதிராக அமெரிக்கா விதித்துள்ள தடையை நீக்குமாறு பெரும்பான்மை உறுப்பினர்கள் கேட்டுக் கொண்டனர்.

தென் ஆப்பிரிக்காவின் நிறவெறி ஆட்சியினர் மீது கடும் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் ஐக்கிய நாடுகள் சபையில் தீர்மானம் நிறைவேறியது.



Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani publications and printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust press at 34, Nelson Manickam Road MADRAS - 600 029.

# நாட்டியம் என் உயிர் மூச்சு

இந்தவார... இயக்குனர்

புரட்சித்தலைவர் நடித்த நம்நாடு, சிரித்து வாழ வேண்டும் ஆகிய படங்களுக்கு நடன உதவியாளராகப் பணியாற்றியவரும், ஸ்ரீதேவி, விஜய சாந்தி போன்ற நடிகைகளுக்கு நடனம் கற்றுத் தந்த வருமான லண்டன் கோபால் "தங்கக்கலசம்" என்ற படத்திற்கு திரைக் கதை வசனம், பாடல்கள் எழுதி இயக்குவதுடன் நடனத்தையும் கவனித்து வருகிறார்.

அவரது திரையுலக அனுபவம் பற்றி அவர் கூறியதாவது:

எனது பள்ளிப்பருவத்தில் ஆலப்புழையில் கோபிநாத் நடன நிகழ்ச்சி நடைபெற்றது அதைப் பார்த்த பின் நடனத்தின் மீது எனக்கு பெரிய ஆர்வம்ஏற்பட்டது 1941ம் ஆண்டு எனது 14வது வயதில் வீட்டை விட்டுவெளியேறி ராஜமாணிக்கம் பாய்ஸ் கம்பெனியில் சேர்ந்தேன் அங்கு சந்திரபாபு, சிவாஜி, நம்பியார், ஆகியோர் இருந்தனர் அங்கு ஓராண்டு இருந்தேன். அதன்பின் ராம்கோபால் என்பவருடன் ஒப்பந்தம் செய்து கொண்டு உலகம் முழுவதும் நடன நிகழ்ச்சிகளில் பங்கு பெற்றேன். பந்தநல்லூர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் பரதம் கற்றேன் லண்டன்சென்று நடனநிகழ்ச்சிகள்நடத்தியதால் லண்டன்கோபால் என்று என்னை அழைக்கத் துவங்கினர்.

அதன்பின் கோவிந்த கோபாலன் என்றபெயரில் நாடகம் நடத்தினேன் நாடகத்திற்கு தேவையான பாடல்களை எழுதத் தொடங்கினேன். எனது பள்ளிப்பருவத்தில் திரைப் படங்களை பார்க்கும் தருணத்தில் கேரளாவில்தமிழ் படங்கள் அதிகம் திரையிடப்படும். அன்றுள்ள மலையாளமும் கிட்டத்தட்ட தமிழ்போல் தான இருக்கும் பின் சமஸ்கிருதம் கலந்ததால் உச்சரிப்பில் அதிக வித்தியாசம் காணப்பட்டது. எனக்கு இயற்கையாகவே தமிழ் மீது பற்று அதிகம் இங்குசென்னைக்கு வந்த பின் கன்னிமாரா நூலகம் போன்றவற்றிற்கு சென்று சிலப்பதிகாரம் போன்ற நூல்களை படித்தேன் அது எனக்கு நடன நிகழ்ச்சிகளை சிறப்பாக அமைக்க பெருமளவு உதவியது இதுவரை ஏராளமான நடன நிகழ்ச்சிகளை அமைத்துள்ளேன். குமார சம்பவம் படத்தில் இடம் பெற்ற மன்மதன் நடனம் நான் ஆடியது தான்.

இவ்வாறு லண்டன் கோபால் கூறினார்.

தொடர்ந்து நமதுகேள்விகளுக்கு பதிலளித்து அவர் கூறியதாவது:-

கேள்வி:- உங்களது முதல் டைரக்ஷனே தமிழ் படமாக இருக்க காரணம் என்ன?

பதில்: தமிழ்மீது உள்ள பற்றுதான்.

கேள்வி: தங்க கலசம் படக்கதை எத்தன்மை வாய்ந்தது?

பதில்: என்னுடைய தொழில் அனுபவத்தில் நடந்த சம்பவத்தின் அடிப்படையில் இந்தக்கதையை உருவாக்கி இருக்கிறேன். வழக்கமாக உயர்ந்த சாதியில பிறந்தவர்கள் தான் பரதம் போன்றவற்றில் விற்பன்னர்களாக உள்ளது போன்ற கதைகள் வருகின்றன தாழ்த்தப்பட்ட சமுதாயத்தை சேர்ந்த ஒருவர் பரதத்தின் மீது அபாரக் காதல் கொண்டு மற்றவர்களுக்கு நடனம் கற்றுத்தருவது இப்படத்தின் கதை. உஜ்ஜயினியில் நடந்த ஒரு சம்பவத்தின் அடிப்படையில் இதை உருவாக்கி இருக்கிறேன்,

கேள்வி:- நீங்கள் டைரக்டராகி இருக்கிறீர்கள். அதற்கு ஏதேனும் விசேஷ பயிற்சி பெற்றீர்களா?

பதில்: ஒரு டைரக்டருக்கு முக்கியமாகத்தெரிய வேண்டியது மற்றவர்கட்கு நடிப்பைச் சொல்லித்தரும் பக்குவம் வேண்டும்என்பது என் எண்ணம். அந்தப் பக்குவம் எனக்கு இருப்பதாகக் கருதியதால் நான் டைரக்டரானேன்,

கேள்வி:எத்தனை படங்களுக்கு நடன பயிற்சி அளித்துள்ளீர்கள்?

பதில்:-ஏராளமானபடங்களுக்கு பணியாற்றியுள்ளேன் முதல்வர் நடித்த ஜெனோவா, சிரித்துவாழ வேண்டும்,நம்நாடு ஆகிய படங்களுக்கு உதவியாளராகபணியாற்றியுள்ளேன்.

கேள்வி:-உங்கள் லட்சியம் என்ன?

பதில்:-நல்லகருத்துள்ள படங்களை மக்களுக்குத் தரவேண்டும் அதுவும் நமது நடனக் கலையின் பெருமைகளை விளக்கும் படங்களை எடுக்க பெரிதும் விரும்புகிறேன். என் இறுதி வரை இந்தத் தொழில் செய்ய வேண்டும் என்பது தான் என் லட்சியம்.

கே:- உங்கள் நடன நிகழ்ச்சியைப் பாராட்டியவர்களில் மறக்க முடியாதவர் யார்?

ப - கேரள ஆளுநராக வி.வி.கிரி இருந்தபோது எனது நாட்டியநிகழ்ச்சியை ரசித்துப் பார்த்து 3500 ரூபாய் பரிசு வழங்கினார். இது மறக்க முடியாத நிகழ்ச்சி அகில இந்திய நடன போட்டியிலும் பல முறை பங்கேற்றுள்ளேன் உலக விமர்சகர்கள் சங்கம் என்னை சிறந்த நடனக் கலைஞராக தேர்ந்தெடுத்ததும் மறக்க முடியாதது

கே: அடுத்த படைப்புக்கு திட்டமிட்டு விட்டீர்களா?

ப: அடுத்து 'இளமைக் கனவுகள்' என்ற படத்தை உருவாக்க உள்ளேன் இது விஞ்ஞான ரீதியான சப்ஜெக்ட் தங்கக் கலசம் பொங்கலுக்கு வர இருக்கிறது.

-: லண்டன் கோபால் :-

★★ சில்க்
படம்: வீரமகன்

★★ ஸ்ரீஜெயா
படம்: தங்க கலசம்

# நம்ம ஊரு நல்லஊரு

-: விமர்சனம் :-

ராமராஜன் முதன் முதலாக கதாநாயகனாக நடித்து வெளிவந்துள்ள படம் நம்ம ஊரு நல்ல ஊரு. பொது நலத்தில் ஈடுபடும் வாலிபனுக்கும கல்லூரி மாணவிக்கும் இடையே ஏற்படும் காதல் அந்தக்காதலர்களை இணையவிடாது உறவினர்கள் செய்யும் சதி. இறுதியில் காதலர்கள் இணைவது. இப்படி வழக்கமான காதல் கதையை சற்றுவித்தியாசமாக அழகப்பன் படமாக்கியுள்ளார்

படத்தின் நாயகனாக ராமராஜன் நடித்துள்ளார். அமைதியான அவரது தோற்றத்துக்கு ஏற்ற பாத்திரம் முதல் படத்திலேயே தனது நடிப்பு முத்திரையை வெகு அழகாக பதித்துள்ளார். நாயகியாக வரும் ரேகாவின் நடிப்பும் சிறப்பாக உள்ளது. ராமராஜனுக்கு கோபமாக கன்னத்தில் தரும் போதும் கிளுகிளுப்புடன் கன்னத்தில் தரும் போதும் வித்தியாசமான உணர்ச்சிகளை வெகுசிறப்பாக வெளிப்படுத்தி இருக்கிறார்.

செந்திலின் நகைச்சுவை படம் முழுக்க படுஜோராக இருக்கிறது படம்போரடிக்காமல் செல்ல செந்திலின் பங்கு மிகவும் உதவியாக உள்ளது

சுலக்ஷணா, ராஜீவ், கே கே சௌந்தர், வினு சக்கரவர்த்தி ஆகியோரும் தங்கள் பாத்திரத்தை சிறப்பாகச் செய்துள்ளனர்.

திரைக்கதையை தெளிந்த நீரோடைபோல் ராகவன் தம்பி அமைத்துள்ளார். கங்கை அமரனின் இசையில் பாடல்கள் அனைத்தும்தேனாக இனிக்கிறது. படத்திற்கு சிறப்புசேர்க்கும் வகையில் கணேசபாண்டியனின் ஒளிப்பதிவு சிறப்பாக உள்ளது.

காதல் கதையை கலகலப்புள்ள படமாக அழகப்பன்உருவாக்கி இருக்கிறார். படத்தை தொய்வின்றி இயக்கிய அழகப்பனுக்கு இந்தப் படம் பெருமை சேர்ப்பதாகஉள்ளது

தமிழ்திரையுலகிற்குநல்ல ஒருகதாநாயகன்கிடைத்து விட்டார் என்ற மகிழ்ச்சியை தரும் இந்தபடம் அனைத்து தரப்புமக்களின் வரவேற்பை பெறும்.

-பாலுமணி

# காலம் மாறுது

செல்லப்பா கிரியேஷன்ஸ் சார்பில் வி,விஜய கோபால் தயாரித்து வந்த கடலூர்புருஷோத்தமனின் "காலம் மாறுது" இம் மாதம் திரைக்கு வருகிறது.

புதுமைப் படைப்பான இப்படத்தை கடலூர் புருஷோத்தமன் இயக்கியுள்ளார். விஸ்வம்நடராஜ் ஒளிப்பதிவு செய்ய எம்.எஸ்.விஸ்வநாதன் இசை அமைத்துள்ளார்.

ராஜேஷ், வி கோபால கிருஷ்ணன்.கே. கே.சவுந்தர், லூஸ்மோகன சுலக்ஷனா, அஸ்வினி, புஷ்பலதா, காந்திமதி, கோகிலா,ஸ்ரீலேகா, இவர்களுடன் கடலூர் புருஷோத்தமனும் நடித்துள்ளார்.

# பத்திரிகையாளர் சந்திரசேகர் எழுதிய பாடல் பதிவானது

பிரீத்தி இந்தர் கம்பைன்ஸின் மனைவியைக் காதலி படத்திற்காக பென் சுரேந்தர் இசையில் ஆர். இ சந்திரசேகர் எழுதிய:

'ஆடும் போதும் பாடும்
போதும்
தேவை இந்த போதை
ஓடம் போலே ஆடும்
நெஞ்சில்
எங்கே-அந்த ராதை

என்ற பாடலை எஸ். பி பாலசுப்ரமண்யம் பாட பிரசாத் ஒலிப்பதிவுக் கூடத்தில்ஒலிப்பதிவானது

சுரேஷ். நதியா-மாமிரி, ராஜீவ், செஞ்சிகிருஷ்ணன் உட்பட முன்னணி நட்சத்திரங்கள் பங்குபெறும்இந்த படத்தை எஸ் என். ரவி இயக்க ஒளிப்பதிவை கேசவன் கவனிக்கிறார். கதை, இசை, தயாரிப்பு, பென்சுரேந்தர்.

# கலைவிருந்து

★★ ரஞ்சனி
படம்:- மண்ணுக்குள் வைரம்

# பூபதி இயக்கும் உதிராத ரோஜாக்கள்

எஸ் எஸ் சக்கரவாத்தி அளிக்கும் ஹிமாலயா பிக்சர்ஸ் என்ற புதிய பட நிறுவனம் "உதிராத ரோஜாக்கள்" என்ற பெயரில் ஒரு காதல் கதையை படமாக்கவிருக்கின்றனர்.

மோகன் - ரேகா ஜோடியாக நடிக்கும் இப்படத்தில் செந்தில், தீபா, நடிக்க மற்ற நட்சத்திர தேர்வு நடை பெற்றுக் கொண்டிருக்கிறது. இப்படத்தின் ஒளிப்பதிவை ராஜாராஜன் "வனிக்க மனோஜ்-கியான் இசையமைக்கிறார்கள் பட தொகுப்பை ரமேஷ் மோகன் செய்கிறார்.கதை திரைக்கதை அமைத்து இயக்கும் பொறுப்பை 'டிசம்பர்பூக்கள்' படத்தை இயக்கிய ஆர். பூபதி ஏற்றுள்ளார். அருண்சந்திரன் தயாரிக்கும் இப்படத்தின் படப்பிடிப்பு ஜனவரிமாதம் துவங்குகிறது.

# கார்த்திக்குடன் பல்லவி மோதல்

போலீஸ் உதவிக் கமிஷனர் விஜய்சிறுமி சாராவை அழைத்துக் கொண்டு ஹோட்டலுக்குசென்றான சிறுமி சாராவுக்குஐஸ்கிரீம் வாங்கி கொடுத்துவிட்டு புத்தகம் படித்துக் கொண்டிருந்த விஜய், தன்னருகில் அமர்ந்திருந்த சிறுமியை காணாததுகண்டுதிகைத்து அவளைத் தேடிய போது சிறுமி சாராவோ ஐஸ்கிரீமை கையில் எடுத்துக் கொண்டு அங்கிருந்த கார் மீதுஏறிஅமர்ந்துகொண்டு ஐஸ்கிரீமை சாப்பிட்டுக் கொண்டிருந்தாள்.

உட்கார்ந்து புத்தகத்தை படித்த படியே சிறுமி சாராவை சைகையால் அழைத்து அவளை பார்த்து அடிக்கடிசிரித்துக் கொண்டிருந்தான் விஜய்.

அவருக்கு எதிரே தன் தோழிகளுடன் அமர்ந்து சாப்பிட்டிக்கொண்டிருந்த ரேகா தன்னைத் தான் விஜய் சைகை காட்டி அழைக்கிறான் சிரிக்கிறான் என்று நினைத்து தன் தோழிகளுடன் வந்து உதவிகமிஷனர் விஜயிடம் தகராறு செய்ய ஆரம்பித்தாள் ரேகா.

இப்படியொரு காட்சி செஜின் இண்டர் நேஷனல் தயாரிக்கும் பதவி படத்திற்காக அடையாறு போட் கிளப்பில் படமாக்கப்பட்டது.

விஜயாக கார்த்திக்கும் ரேகாவாக பல்லவியும் நடித்தார்கள்.

இப்படத்தில் ராஜ்திலக் என்ற புதுமுகம் துப்பறியும் வேடத்தில் இரண்டாவது கதாநாயகனாக அறிமுகமாகிறார்.

இவர்களுடன், கே. ஆர். விஜயாமுக்கியமானவேடத்திலநடிக்கிறார் மற்றும்இப் படத்தில், செந்தாமரை, வி. கே, ராமசாமி, செந்தில், லூஸ்மோகன், மலேசியா, ராம்குமார், வி. கே ஆர். ரகுநாத், தேவி லலிதா. தேவிபாலா மற்றும் பலர் நடிக்கிறார்கள்.

இசை: சிவாஜி ராஜா. ஒளிப்பதிவு: எம். கேசவன் கதை திரைக்கதை வசனம் டைரக்ஷன்: விஜயகணேசன், தயாரிப்பு: கே ஆர். விஜயாவின் தம்பி கே, ஆர். நாராயணன்.

# ரேடிமேடு மாப்பிள்ளை

ஆர். முகமது அலியின் செவன் எய்ட் சிக்ஸ் பிக்சர்ஸ் பட நிறுவனத்தார் 'ரெடிமேடு மாப்பிள்ளை' என்கிற பெயரில் படம் ஒன்றினை தயாரிக்கிறார்கள். இப்படத்தின் ஆரம்ப விழா சிறப்பாக நடைபெற்றது.

இப்படத்தில் நடிகர் பாண்டியனுடன் புதுமுகம் சுவேதா கதாநாயகியாக நடிக்கிறார். டிஸ்கோசாந்தி ஜெகன் ஆகியோரும் நடிக்கிறார்கள். மற்ற நடிகர்களின் தேர்வுநடை பெற்று வருகிறது.

இப்படத்திற்கான கதை திரைக்கதை,வசனம்எழுதி கே. என், இராமநாதன் டைரக்ட்செய்கிறார். இவர் ஏ. ஜெகநாதனிடம் துணை டைரக்டராக பணியாற்றி உள்ளார், டைரக்ஷன் மேற்பார்வை ஆர். முகமதுஅலி திருமதி அஸினா முகமது அலி தயாரிக்கிறார்.

★★ இளவரசன் - டிஸ்கோ சாந்தி
படம் - கிழக்கே வெளுத்தாச்சு

# ஆறாவது குறுக்குத்தெரு படப்பிடிப்பு துவக்கம்

ஸ்ரீ சாயிமீடியா ஆர்ட்ஸ் தயாரிக்கும் ஆறாவது குறுக்குத்தெருபடப்பிடிப்பு துவங்கி நடைபெற்று வருகிறது. முரளிராஜ் இயக்கும் இப்படத்தை பீலிச் சந்திரா, துவாரகநாத் ஜக்கரியா ஆகியோர் தயாரிக்கின்றனர்.

★★ ஜெயஸ்ரீ - பாண்டியன்
படம் - திருமதி ஒரு வெகுமதி